REGD No. M. 4643

# திராவிடநாடு

இலங்கை 15 சதம் விலை அணா 2

மலர் 9 | 27—5—51 | இதழ் 49

ஒரு செய்தி 15—5—51 தினசரி இதழ் ஒன்றிலே வந்திருந்தது. அரிசியை கள்ளத்தனமாக கடத்தினள் என்பதாக ஒரு ஏழைப் பெண் கோர்ட்டிலே விசாரிக்கப்பட்டு, அபராதம் விதிக்கப்பட்டாள். அவள் நீதிபதியைப் பார்த்து கெஞ்சினளாம், "என்னை ஜெயிலுக்கு வேண்டுமானலும் அனுப்புங்க. அந்த அரிசியை மட்டும் தந்துடுங்க" என்று. பரிதாபகரமாக இருந்ததாம் அந்தக் காட்சி! இந்தச் சம்பவத்தில் சம்பந்தப்பட்ட ஏழைப் பெண், தண்டனை தந்த நீதிபதி, அவளைப் பிடித்த போலீஸ், இதைப் பத்திரிகைகளில் படிக்கும் மந்திரிமார் அத்தனை பேருடைய இதயமும் என்ன எண்ணியிருக்கும்? அதை அவர்கள் மறைத்து மூடாமல் பேசினல் எப்படியிருக்கும். அது தான் இது!

# ★ அவர்கள் பேசவில்லை! ★

—அண்ணல்

## ஏழைப்பெண்

"நான் ஜெயிலுக்கு வேணும்னலும் போறேன். ஆனல் அரிசியை மாத்திரம் திருப்பிக் கொடுத்துவிடுங்க. ஐயா, உங்களுக்கு ரொம்ப புண்யம் உண்டு. இதை மட்டும் செய்யுங்க. இரக்கம் காட்டுங்க. நான் ரொம்ப ஏழைங்க! என் புருசன், வண்டியோட்டும். வர்ரதைக் கொண்டாந்து தரும், அதைக் கொண்டுதாங்க எங்க குடும்பம் பிழைக்கணும். குடும்பம்னலும் நாங்க ஒருத்தரா, இரண்டு பேருங்களா! அஞ்சு பேருங்க — அதிலே எங்க மாமா, மாமியா இரண்டு பேரு. மாமாவுக்கு கண்ணு பழுதடைஞ்சு போச்சு. அத்தை, படுத்த படுக்கையாக் கிடக்கிறுங்க. இரண்டும் வயசான கட்டைங்க. அவுங்களாலே ஓட முடியுமா, சம்பாதிக்க முடியுமா? உட்கார்ந்த இடத்திலே ஏதோ ஒரு வாய் சோறு கிடைக்குமான்னு, நினைக்கிற காலம். அவுங்களையும் நாங்க தானுங்களே, காப்பாத்தணும் அரிசி கிடைக்கலேங்கிறதாலே அவங்களே கவனிக்காமலிருக்க முடியுமா? சோறு இல்லேன்னு சொல்லி 'சும்மா கிடங்க'ன்னு சொல்லவா முடியும்? பெத்தவங்களாச்சே — அதுவும் பெரியவங்களாச்சே! நாங்க, என்னங்க பண்ணுவோம். எட்டு நாளா, அடுப்பிலே பூனை தூங்குது. வழக்கம் போல நாளைக்கு ஒண்ணு இரண்டு சம்பாதிச்சுத்தான் வருது என் புருசன். பணம் கிடைச்சும் பட்டினிங்க! எங்க பையன் ஒருத்தன் இருக்கான் —ஒரே பிள்ளை. செல்லமா வளர்க்கிறோம். வயசு அஞ்சு ஆகுது. அவன் 'அம்மா, அம்மா'ன்னு அலர்ரதை பாக்க பெத்த வயறு எறியுதுங்க. பாவம் சிறுசு! அதுக்கென்ன தெரியும் அப்பாவும் அம்மாவும் படுங் கஷ்டம். அது, அலருது. [illegible] தூங்காமெ [illegible]. பால் வாங்கித் தந்தேன். பெப்பர்மெண்டு கொடுத்தேன். அதெல்லாம் போதுங்களா. ஒரு கவளம் அரிசிச் சோறுவது வேணுங்களா? அது முகத்தையும் வயத்தையும் பார்க்கச் சகிக்கலே.

'அம்மா, அம்மா'ன்னு கத்தருன். அடுப்பங் கரைக்குப் போகிருன். அங்கே, சட்டிபானைகளை யெல்லாம் திறக்கிருன். 'எங்கே அம்மா சோறு'ன்னு கேட்கிருன். நான் என்னங்க பதில் சொல்றது? ஏதோ, இருக்கிறதைச் சமைத்துப் போடலாம்னலும்ஒருபிடிகூடஅரிசி இல்லீங்க......பகலெல்லாம் உழைச்சுட்டு புருசன் வரும். வந்ததும் படுத்து விடும் — பசியோடே. இந்தக் கண்றுவியை எப்படீங்க சகிக்க முடியும்? கையிலே காசில்லேன்னலும் பரவாயில்லே. கையிலே காசிருந்தும் கால் வயத்துக்கு சோறு இல்லே! பெரியவங்க பட்டினி. பெத்த பிள்ளை அழுருன். வயிறு கொதிக்குது. இதை எப்படீங்க சகிக்கிறது. ஒரு நாளா, இரண்டு நாளா? அக்கம் பக்கத்திலே உள்ளவங்களை கேட்டேன், 'அரிசி இருந்தா தாங்க. பணம் தர்ரேன்'னு கேட்டேன். கிடைக்கலே! அதுக்கப்

புறம் தாங்க, வெளியூருக்குக் கிளம்பி னேன். அங்கே யாரோ அரிசி தருவதாகச் சொன்னுங்க. 'சரி'ன்னு புறப்பட்டேன். போனேன். அரிசி கிடைச்சுது. 'ரேசன்' கடையிலே கிடைக்கிறதைவிட நல்ல அரிசிங்க. எவ்வளவு வேணும்னுலும் தர்ரேன் னுருங்க. ஆனல் விலை மட்டும் ரொம் பங்க. என்ன பண்றது? அதாவது கிடைக்குதேன்னு வாங்கினேன். தலையிலே தூக்கி வச்சுகிட்டேன். வேகம் வேகமாக வந்துகிட்டு இருந் தேன். அப்ப தாங்க, இந்த போலீசு ஐயா வந்தாரு. என்னை நிக்கச் சொன்னரு. 'அரிசியைத் திருட்டுத்தனமாவா, கொண்டு போரே'ன்னு கேட்டாரு.

'இல்லீங்க, வாங்கிட்டுபோரேன்' அப்படின்னு சொன்னேன்.

"வாங்கிகிட்டுப் போறீயோ? ஆளைப் பாரு. இறங்கு கீழே"ன்னு அதட்டினுரு. நான் ஏங்க இறக்க ணும். என் புருசன் கொடுத்த பணம். அதைக் கொடுத்து, அலேஞ்சு, திரிஞ்சு, அரிசி வாங்கி யது நான். ஏன், 'இறக்கணும்?' 'முடியாது—நான் போகணும்'னு நடந்தேன். 'ஓடப் பாக்கிறீயா— கமுதே'ன்னு ஓடியாந்தாருங்க. தலே யிலே இருந்த மூட்டையை, கீழே தள்ளினுரு. என் மனசு பதறிச்சு. வீட்டிலே பிள்ளை அழுவானே, போய்ச் சோறுணுமேங்கிற அவசரம் வேறே. 'ஐயா! நான் திருடலீங்க, காசு கொடுத்துத்தான் வாங்கியா ரேன்; விடுங்க'ன்னு என்னென்ன சொல்லணுமோ, அவ்வளவும் சொல்லிக் கெஞ்சினேன். அழு தேன். அப்பவும், அவர் அசைய லீங்க. "இந்தா, புள்ளெ. நீ, திருட் டுத்தனமா அரிசி கொண்டு போனே. உன்னேக்கையும் களவுமா பிடிச்சுட்டேன். இப்ப, அழைச்சு கிட்டுப் போய் கோர்ட்டிலே விட் டுப் போறேன். அங்கே போய் விட்டால், நீ ஜெயிலுக்குத்தான் போகணும், தெரியுமோ?" அப்ப டீன்னு, மிரட்டினுரு. நான் ஏங்க பயப்படணும்னு கேட்டேன் "ஏன், ஐயா, மிரட்டுறே! காசு கொடுத்து வாங்கிகிட்டுப் போகிறது தப்போ. கள்ளத்தனமா கொண்டு போறே ன்னு சொல்றீயே. போய்க் கேளு, நான் சொல்ற இடத்திலே. காசை எண்ணிக் கொடுத்துட்டு வாங்கி

கிட்டு வர்ரேன், தெரியுமா?"ன்னு கேட்டேன். போலீசுஐயா விடலே!

திருட்டுக் கமுதேன்னு திட்டி னுரு. 'கள்ளத்தனமாக அரிசி கொண்டாங்துட்டு, கலாட்டா வேறே, புண்ரீயோ'ன்னு அதட்டி னுரு. கடைசியிலே, சொன்னரு, "இந்தா புள்ளே. உன்னைப் பார்த்தா பரிதாபமா இருக்கு. உன்னை விட் டுடுறேன். ஓடிப் போயிடு. அரிசி யோடு பிடிச்சுக்கிட்டுப் போய் கோர்ட்டிலே விட்டேன்னு, உன் னைத் தண்டிச்சுடுவாங்க. ஜெயி லுக்கு அனுப்பிச்சுடுவாங்க. தெரி யுமா? தலை தப்பிச்சுதுன்னு ஓடிப் போயிடு"ன்னுருரு—இரக்கம் வந்தவர் போலே. 'ஐயா, நீங்க மவராசனு இருக்கணும்னு' சொல்லிட்டு, புறப் பட்டேன் — மூட்டையை தூக்கிக் கிட்டு. 'இந்தா, அம்மா! பெரிய ஆளாயிருக்கியே. போடு மூட் டையை. போனப் போறதுன்னு பார்த்தா, மூட்டையையும் தூக்கி கிட்டு நடையை கட்டுறீயே!'—அப் படீன்னுரு.

அலேஞ்சு திரிஞ்சு, வாங்கின அரி சியை, அவர்கிட்டே கொடுத்துட்டு போகணுமாம்! எப்படிங்க, கதை. "முடியாது, அரிசியை விட்டுட்டு போக முடியாது"ன்னு சொன் னேன். அவுரு, இங்கே, அழைச்சு கிட்டு வந்துட்டாருங்க. இதுதாங்க, நடந்தது. சத்யமாச் சொல்றேன். இது நிஜங்க! ஐயா, என்னை விட்டு டுங்க. நான் வேறு குற்றம் எதுவும் செய்யலீங்க. வேணும்னுலும், இந் தப் போலீசு ஐயாவே, கேட்டுப் பாருங்க. ஐயா! ஐயா! இரக்கம் வையுங்க. நான்ஏழைங்க. வீட்டிலே குழந்தை 'அம்மா! அம்மா! அம்மா!'ன்னுஅலறித் துடிப்பானுங்க. அத்தையும், மாமாவும் என்னைத் தேடுவாங்க. என்னைப் போகச் சொல்லுங்க, ஐயா! இந்த அரிசியை என்னிடம் தாங்க சாமி! உங்க, குழந்தை குட்டிக நல்லா இருக்க ணும். சாமி! சாமி!! இந்த அரிசியை என்னிடம் தாங்க. இது இல்லாமெ, வீட்டுக்குப் போய் என்னுங்க செய் யறது! இந்த அரிசி இல்லாமெ, என் குடும்பம் ஒரு வாரமாப் பட்டினிங்க. பாதி உயிர் போயிட்டுதுங்க, பையன் துடிக்கிருன், பார்க்கச் சகிக்கலே! புருசன், துரும்பாப் போயிட்டுது. பாடுபட்டும், சாப் பிட இல்லேன்னு? சாமி! கருணை

காட்டுங்க. இந்த அரிசியை எடுத் துப் போகலாம்னு, உத்திரவு கொடுங்க. என்னை ஜெயிலுக்குப் போகச் சொன்னுலும் போறேன். ஆனல் அரிசியை மாத்திரம் எடுத் துக்காதீங்க!"

### நீதிபதி

"என் புருசன் சம்பாதிச்ச பணம். அலேஞ்சு திரிஞ்சு நான் வாங்கிய அரிசி. அதை, இந்தப் போலீசு ஐயா கிட்டே நான், ஏன் தரணும்?"— நன்ருகக் கேட்டாள். அந்தக் கேள்வி என்னையே திகைக்கச் செய் தது! அவள், 'ஐயா ஐயா'வென்று அலறியபோதும், 'சாமி, சாமி' என்று கெஞ்சிய போதும், என் இதயம் துடித்தது. ஏழைப் பெண்! பசி தாங்காத நிலை! பாபம், அவள் தான் என்ன செய்வாள்? கையில் பணமிருந்தும், போதுமான அரிசி கிடைக்கவில்லை. ஆகவே, அலேந் தாள். அதிக விலை கொடுத்து அரி சியை வாங்கினுள். ஆனல், அவள் இஷ்டப்படி நடக்க, சட்டம் இடந் தருமா? இடந் தராதே! அவள் வார்த்தைகள், எனது இதயத்தில் புயலை எழுப்பின. "என்னை ஜெயி லுக்கு வேணும்னுலும் அனுப்புங்க. ஆனல், அரிசியைமட்டும் கொடுத்து விடுங்க......" பரிதாபமான வார்த் தைகள்! ஜெயில்—எத்தனை பேர் இந்தப் பெயரைக் கேட்டாலே கில் கொள்வர். அதிலும், அவள் சாதா ரணப் பெண். கல்வி வாசனை அறி யாதவள். போலீசைக் கண்டாலே பயப்படும் நிலையுள்ளவள்! அவள் கூறினுள், ஜெயில் கூடப் பரவா யில்லை; அரிசி மட்டும் தேவை என்று. எவ்வளவு வேதனையிருந் திருந்தால் இந்த வார்த்தைகள் அவ ளது வாயிலிருந்து வந்திருக்கும்! குடும்பத்திலே நிலவும் பட்டினி பற்றி கூறியபோது நானே பதறிப் போனேன். "ஐயா, நான் திருடலீங்க, காசு கொடுத்து தான் வாங்கினேன்" என்று அவள் சொன்னபோது, அந்தக் காசைச் சம்பாதிக்க எவ்வளவு கஷ்டப்பட்டிருப்பாள் அவள், என் பது தெளிவாகத்தெரிந்தது! திகைத் துத்தான் போனேன். ஆனல் என்ன செய்வது?" "சரி அம்மா அரிசியை எடுத்துக்கொண்டுபோ" என்று நான் கூறிட்முடியும்! சட்ட

(11-ம் பக்கம் பார்க்க)



## ★ ஊடல் தீர்ந்திட! ★

கன்னத்தை தட்டினுன் — கடி கடுத்தாள் அவள்

கிள்ளினுன், செல்லமாக—கிள்ளி னுள், கோபமாக!

சிரித்தான்! சீறினுள்!!

"கண்ணே" என்றான்.

"கனிமண்ணே" என்றாள்.

"கோபமா?" என்றான், மீண்டும்

"மோகம்!" என்றாள் ஆத்திரமும், கேலியும் தொனிக்க.

அவன் காமத்தின் கடைசி கட் டத்தில்!—அவளோ, கோபத்தின் கோடியில்!

"பிடிவாதம் கூடாது!" என்றான்.

"இது வீண் விவாதம்!" என்றாள்.

அவன் கெஞ்சினுன். அவள் மிஞ்சினுள்!

"நான் செய்தது தவறு" என்றான் அவன் பணிந்தான். அவள்மட்டும் அணைந்திடவில்லை!

"ஒரே ஒரு முத்தம்" என்றான், உருக்கமாக.

"அந்த சத்தமே என் காதில் விழக் கூடாது" என்றாள், நறுக்காக!

அவள், கோபத்திற்குக் காரணம் அவன், தன் சொந்த மனைவியைப் பார்க்கச் சென்று விட்டான் என் பதுதான்.

அவள் பேச பேச, அவனுக்கும் கோபம் வரத்தொடங்கிவிட்டது!

"இப்படிச் செய்தால்......?" என்றான்

"என்ன நடந்து விடுமாம்!" என்றாள்.

"இந்த பக்கமே திரும்பக்கூட மாட்டேன்—அப்புறம் நீதான் அவ திப் படுவாய்!" என்றான்.

"வெறும் மிரட்டல்" என்றாள். ஆனுலும், கொஞ்சம் சந்தேகம்தான் அவளுக்கு.

ஆகவே கோபத்தைக் குறைத் தாள். கண்களிலே நீரை நிறைத் தாள்.

"நீங்கள், அடிக்கடி அங்கே போய் விடுவதும், பிறகு வந்து கொஞ்சுவதும் எனக்கு கொஞ்ச மும் பிடிக்க வில்லை. நம்பியிருக்கும் என்னை நடு வீதியில் விட்டு விடுவீர் கள் போலிருக்கிறதே!" என்றாள்.

"அப்படியொன்றும் நடந்து விடாது, கண்ணே" என்றான்.

ஊடல் தீர்ந்தது—இனிக் கூடல் தானே!

இது, நவீன சிலப்பதிகாரத்தின், ஒரு நல்ல கட்டம்.

* * *

இந்த மாதவி வீட்டு மாலை நேரப் பேச்சு போலவே இந்திய மரமத்து உற்பத்தி சபை மந்திரி காட்கில் பேசியுள்ளார்

பூனவில், அவர் கூறியுள்ளவை, நமக்கு, மாதவி வீட்டுப் பேச்சைத் தான், நினைப்பூட்டுகிறது.

இந்திய சர்க்காரின், இன்றைய போக்கு, கோவலன் நாடகத்தின் முற்பகுதி!

மாதவி வீட்டில் கோவலன் — கண்ணகி, கண்ணீருடன்!

இன்றைய இந்திய சர்க்கார், நவீன கோவலனுகவே காட்சியளிக் கிறது! கொண்டவளை மறந்துவிட்டு, வழியில் கண்டவளைப் பின்பற்றி யோடிடும், காமக்கா தலியின் கேளிப் போக்கு போலவே, ஆட்சி யாளரின் நடவடிக்கைகள் உள்ளன.

காங்கிரஸ் ஆட்சி பீடம் ஏறிய தும், முதலாளிகள் குதூகலித்தனர் —கொண்டாட்டம் நடத்தினர் — தொழிலாளிகள் ஏமாந்தனர், எதிர் பார்த்ததற்கு நேர்மாருக, காங்கிர சார் நடந்துகொண்டனர்.

ஏழைகள் ராஜ்யம் எங்கள் ராஜ் யம் என்றனர். ஆனல் ஏழைகள் ராஜ்யத்தில், 'பணப் பேழைகள்' தான் விழாவும், விருந்தும் நடத்தி மகிழ்ந்திட வழி ஏற்படலாயிற்று—

டாடா, பிர்லா, பஜாஜி 'என்தன் வலது தோளும், கண்ணும் துடிப்ப தென்ன; இன்பம் வருகுது என்று சுற்றும் மில்லே' என்று பாடினர், காங்கிரசார் ஆட்சிக்கு வந்த பொழுது!

உழைத்து, உழைத்து, ஓடான வர்கள், வெயிலிலும், மழையிலும், பனியிலும், பாடுபட்டு மேனி கருத்தவர்கள், உழைப்பாலேயே உருக்குலைந்தவர்கள் — பசியால் துவண்டும் பாடுபட மறுக்காத, மறக்காத பாட்டாளி மக்கள், ஏதேதோ கிடைக்குமென்று எதிர் பார்த்தனர். ஆனல் கிடைத்ததோ, அவர்களை மலைக்க வைத்துவிட்டது. அவர்கள் மனதிலே மோதவிடப் பட்டிருந்த ஆசை அலைகள் எல்லாம் நம்பிக்கை கரையை உடைத்து நாச மாக்கி விட்டன. அவர்கள் 'மனித ராய், ஏன் பிறந்தோம் இம்மண்ணில்' என்று பாடினர், காங்கிரசாட்சி ஆளத் தொடங்கியவுடன்.

முதலாளிமார்களின் மோகனப் புன்னகைக்காக தொழிலாளிகள் இரத்தம் சிந்தப்பட்டது.

பணமூட்டைகள் பக்கத்தி லிருந்து துப்பாக்கிகள் பேசின— தடிகள் தர்பார் நடத்தின—கண்ணீர் புகை கர்ஜனை புரிந்தது!

சிறை, அவர்கள் சிரித்தால் திறந் தது—விரும்பினுல் மூடிக் கொண் டது!

சட்டம், அவர்கள் வீட்டுப் பணி யாள் போலவே வேலை செய்தது.

இவ்வளவும் நடந்தும், தொழி லாளிகளிடம், சென்று காங்கிரசார் பேசாமலிருந்ததில்லை.

காங்கிரசாட்சியார் வந்த பிறகு நடந்த வேலைநிறுத்தங்கள் எத்தனை! தடியடிப்பிரயோகங்கள் எவ்வளவு! சிறையிலே சிக்கிச்சீரழியும் பொதுப் பணி புரிந்திடும் உத்தமர்களின் தொகை மிகப்பெரிது!

முதலாளிகளின் ஏவலாளிகள் போலவே, காங்கிரசாட்சி இதுவரை நடந்து வருகிறது-இனி மாறத்தான் போகிறதா, என்ன,—இல்லை!

கண்ணகியை, மணந்தவன் கோவ லன்—ஊரிலே அவர்கள் இருவரை யும் தான் தம்பதிகள் என்கின்றனர். கோவலனே கூட அதைத்தான் சொல்கிருன்—சொல்லமுடியும்!

தொழிலாளிகள்தான், தங்கள் துரைத்தனத்தின் உயிர் நாடி யென்று காங்கிரசார் பேசுகின்றனர். ஆனல் முதலாளிகள் முகங் கோணு மல் நடந்து கொள்கின்றனர்.

மாதவி வீட்டிலிருந்து கொண்டு, கண்ணகியைப் பற்றிப் பேசுகிருன் கோவலன்—முதலாளிகளுக்கு வாழ் வளித்து விட்டு, ஏழை பங்காளர்

நாங்கள் என்று பேசுகின்றனர் காங்கிரசார்.

இந்நிலையில், மந்திரியார் பேசியுள்ளது, வேடிக்கையாகவும் இருக்கிறது—வேதனையும் தருகிறது.

'தொழில்களை தேசிய மயமாக்கிடுவோம்.

தனி முதலாளி இலாபம் பெற முடியாது.

தனி உடைமை, பல வகை இன்னல்களுக்கு அடிப்படை.

பேசினார்கள் அன்று. இப்பொழுது, தேசிய மயமாக்குதல் என்றாலே, சீறுகிறார்கள்.

தொழில்களை, சர்க்காரே எடுத்து நடத்துவதால், தனி முதலாளித்துவம் ஒழிந்துவிடும் என்றால், சர்க்காரால் முடியாதென்று, 'பச்சையாகவே' பேசிடுகின்றனர்.

அதற்கேற்ப காலம் கனியவில்லையென்கிறார் நேரு.

வெளிப்படையாக, வெட்கம் துளியுமின்றி, தொழில்களை சர்க்காரே ஏற்று நடத்துவதானால், அதற்கு ஏற்ற திறமைசாலிகள் இல்லையென்று ஒப்புக்கொள்வது போல, தப்ப முயன்றார், பட்டேல்.

எல்லா தொழில்களையும் ஏற்பதானால், அதற்குரிய மூலதனம் இல்லையே என்ற முகாரியைப் பாடாத மந்திரி இல்லை.

முதலாளிகள் இதனை ரசிக்கத் தவறியதில்லை.

அதாவது, கோவலன், கண்ணகியை விடுத்து, மாதவி வீட்டிலேயே அடங்கிக் கிடப்பதற்கு ஆயிரம் காரணங்கள் கூறுகிறான், ஊராரிடம்.

சர்க்காரே, அவர்கள் பக்கமிருந்து பேசுகையிலே, ஏழையுழுதிடும் கண்ணீர், கூரிய வாள் என்பதே கேலிக்குரிய பேச்சாகிவிட்டது!

சர்க்காரும், இந்த சரிந்த தொந்தியினரும், சதிபதிகள் போலாகிவிட்ட காரணத்தால், எதையும் இலட்சியம் செய்யாமல், இறுமாப்போடு முதலாளிகள் உலவுகின்றனர்.

அவர்கள், எதையும், வேண்டா வெறுப்பில் செய்வது போல நடித்திடுகின்றனர்.

மூலதனம் போடுங்கள் என்று சர்க்கார் கேட்டும் அவர்கள் போட மறுப்பதாகவே பாவனை புரிந்திடுகின்றனர்.

ஊடல் இல்லாத வாழ்க்கை, உப்பில்லாத படையல் என்பார்கள். அதுபோல, இவர்களுக்கு ஊடல்—அது தீர, வெகு நேரமாகாது!

மூலதனம் போடுங்கள் என்கின்றனர், முத்தம் கேட்பது போல!

முடியாதென்றவுடன், பொது மக்களைக் கொண்டே தொழில்களை நடத்த முடியும் என்கின்றனர், இனி, மாதவி வீட்டு வழிகூட வர முடியாது என்று மிரட்டுவதுபோல!

இந்த உண்மைகளைத் தான், காட்கில் பேச்சில் காண்கிறோம்.

பணம் படைத்த முதலாளிகள் சர்க்காருடன் ஒத்துழைக்க வேண்டும்.

கனம் காட்கிலாரின், உள்ளக் கிடக்கை, இது. ஆனால், இந்தக் கோரிக்கைக்கு இணங்காமல், சிணுங்கிடவே, மிரட்டுகிறார், கோவலன் குரலில்!

அவர்கள் ஒத்துழைக்காவிடில் நாட்டின் அபிவிருத்தித் திட்டங்கள் ஒன்றும், ஒருபோதும் அதனால் கெட்டு விடாது.

காட்கில் இப்படி ஏன் பேசுகிறார் தெரியுமா? பணம் படைத்தோரின், ஊடலைத் தீர்க்க, வழி தேடுகிறார்.

அவரும் கடிந்து கொள்வது போல நடிக்கிறார், பொய்க் கோபம் காட்டுகிறார்.

வள்ளியை, வளைக்க, முருகன் கண்ட முறையைப் போல, இந்த முதலாளி மாதவியை மிரட்ட வழி காண்கிறார்.

முருகனுக்கு உதவியது யானை—இந்தக் கோவலனுக்கு உதவுவது, கண்ணகி நேசம்!

காட்கில், முதலாளிமார்களுக்கு எச்சரிக்கை விடுவது போலப் பேசி, அவர்களுக்கும் ஆட்சியாளருக்கும் உள்ள ஊடலைத் தீர்க்கிறார்.

மாதவி, கடைசி நேரத்திலும், சரணாகதியா அடைந்து விடுகிறாள்—இல்லை, அதுவும் கொஞ்சம் பிகுவுடன் தான் நடந்து கொள்கிறாள்.

சாமான்ய மக்களின் ஒத்துழைப்புடன், அபிவிருத்தித் திட்டங்களை சர்க்கார் நிறைவேற்றி வைக்க உறுதி கொண்டுள்ளது.

இந்தச் சொல்கிற பொழுது, கேட்கிற முதலாளிகள் முகத்திலே இலேசாகப் பயம் தட்டத்தான் செய்யும். அதனால் அவர்கள் இறங்கி வந்துவிட மாட்டார்கள்!

காட்கில் கேட்பது, மூலதனம்—அதற்கு அவர்கள் கேட்பது, பல சலுகைகள் அத்தனையும் தரப்பட்டுவிட்டன. இன்னமும் கேட்டாலும் கொடுக்கத்தான் போகின்றனர்.

அவர்கள் மூலதனம், இப்பொழுது போடாவிட்டால்; பிறகு அவர்கள்தான் அவதிப்படுவார்கள் என்று குறிப்பிடுகிறார்.

மிரட்டுகிறார், காட்கில்! சிரிக்கின்றனர், முதலாளிகள்!!

முதலாளிகள், தங்கள் போக்கை மாற்றிக் கொள்ளவேண்டும்.

பிறகு, அவர்கள் முதல் போட வசதியில்லாது போய்விடும்.

இப்படியெல்லாம், கூறுகிறார். அப்பொழுதாவது, முதலாளியின் முகத்திலே புன்னகையைக் காணலாம். ஊடல் தீர்ந்து கூடலாம் என்ற எண்ணத்தாலேயே, ஏதேதோ பேசுகிறார்.

* * *

தொழில்களை, தேசிய மயமாக்குவது கூடாது என்று பேசிடும், பெரிய மனிதர்கள் ஏராளம்.

அவர்கள், பணப் பெட்டிக் கடியில் படுத்துக் கிடப்பவர்கள்.

தனிப்பட்டோர் முதலில், தொழில்கள் நடந்தால்தான், அவர்களின் இரும்புப் பெட்டிகள் நிறையும்.

ஆட்சியாளர், தொழில்களை நடத்தினால், இலாபம் சர்க்காருக்குச் சேரும். மக்களின் வாழ்விலே ஒளி சேரும்.

ஆனால் இந்திய சர்க்கார், வரும்பொழுது, கூறிய உறுதிமொழிகளை காற்றிலே பறக்க விட்டு விட்டு, இப்பொழுதுமுதலாளிகளுக்கு, பராக்கு கூறுகிறது.

தேசிய மயமாக்குதல் என்றாலே, தேள் கொட்டியது போலத் துடிக்கிறார்கள்!

அப்படி இரண்டொரு போக்குவரத்து வசதிகளை ஏற்றும் நடத்தியும், அதனால், அவர்களுக்கு இலாபம் இல்லையென்று பேசிடுகின்றனர்.

பஸ், விமானம் போக்குவரத்துகளில் இரண்டொன்றை, மாநிலங்...

12-ம் பக்கம் பார்க்க



12-ம் பக்கத் தொடர்ச்சி

இந்த வெட்டுக் கிளிகள் டில்லியின் மீது படை யெடுத்துவிட்டன.

ஆனால் காங்கிரசாட்சியின் மீது இன்று ஏற்பட்டுள்ள தாக்குதல்கள் பல—ரகத்திலும், தரத்திலும் விசித்திரமானவை, விபரீதமானவை!

தேர்தல் வருகிறதென்றவுடன், 'டில்லி மீது' படையெடுக்கத் தோள் தட்டுகின்றனர், ஆள்திரட்டுகின்றனர், வாள் தீட்டுகின்றனர், நாள் பார்க்கின்றனர், பலர்.

டில்லியிலோ தேர்தலில், தாங்கள் ஓடவேண்டி வந்துவிடுமோ என்று, அஞ்சி அஞ்சிச் சாகின்றனர்.

ஓட்டுப் போடும் பெட்டிகளுக்கு வர்ணம் எப்படிப் பூசுவது, எத்தனை வர்ணங்கள் என்பதிலே ஆராய்ச்சி தொடங்கி, வாக்காளிப்போர், கரங்களில் அழிக்க முடியாத சாயம் பூசுவது வரை, போய் நிற்கிறது.

நேற்றுவரை, நடந்த சரித்திர காலபடையெடுப்புக்களை நினைத்துக் கொண்டால் அவர்கள் இதயம் நடுக்கிடாமல் என்ன செய்யும்?

டில்லி, பல சாம்ராஜ்யங்களின் சமாதி பூமி—பல அரியாசனங்கள் அமைக்கப்பட்டது, டில்லிக்குரிய விசேஷ சிறப்பு! அப்படிப் பார்த்தால், காங்கிரசாட்சியின் எதிர்காலமும், தொலை தூரத்தில் நிழலாட்டம் போடாமலா இருக்கும்? அதனால்தான் அவர்கள் அஞ்சுகிறார்கள் — அலறுகிறார்கள்!

வெட்டுக்கிளிப் படை யெடுப்பை விவசாய இலாக்கா கவனித்துக் கொள்கிறது!

ஆனால், காங்கிரஸ் மீது இன்று பஞ்சம் படையெடுத்துள்ளது, பட்டினி, போர் தொடுத்துள்ளது, தொழிலாளர் துயரம் தாக்கியுள்ளது, பொது மக்கள் அதிருப்தி யுத்தம் தொடுத்துள்ளது!

சொந்தக் கட்சியிலே, நினைத்த நேரத்திலெல்லாம் போர் எழும்பி, எழும்பி அடங்குகிறது!

டெல்லி,—இன்று வெட்டுக்கிளியால் தாக்கப்படுகிறது — நாளை? யார் கண்டார்கள்?

★

# ★ தங்கக் குடம் ★

சமுதாயம், உடைந்த பொன் குடம், ஓட்டையான மண் பாண்டமல்ல!

உடைந்த பொன்குடம், உருக்கப்பட்டு, முன்போலவே, உருவாக்க முடியும்—மண் பாண்டம், உடைந்தால் உடைந்ததேதான்!

சமுதாயப் பொன்குடம், இதுவரை பலமுறை உடைந்துதான் போயிருக்கிறது — ஒவ்வொரு சமயம், ஒவ்வொரு 'வஞ்சி பத்தர்' தோன்றித்தான் மீண்டும், மீண்டும் புதுப்பிக்கப்பட்டுள்ளது.

தங்கம், தணலில் வேக வேக தகதகப்பு அதிகரிக்கச் செய்யும். ஆம், சமுதாய தங்கக் குடம், இப்படி புதுப்பிக்கப்படுகிற ஒவ்வொரு முறையிலும், புது ஒளி வீசிடத்தான் செய்தது.

உலக சமுதாயத்திலே இம்மாதிரி சந்தர்ப்பங்கள் எத்தனையோ ஏற்பட்டதுண்டு.

நாட்டுக்கு நாடு, காலத்திற்குக் காலம் சமுதாயம் உருக்கப்பட்டு புது உருவடைந்து வந்திருக்கிறது.

சமுதாய சீரமைப்பிலே நாட்டங் கொண்டோர் நெஞ்சை யள்ளும் நிகழ்ச்சிகள் உலக சரித்திரத்தின் பொன்னேடுகளில், அங்கங்கே மின்னலிட்ட வண்ண முள்ளன.

உலக நாகரீகத்தின் தொட்டில் என்று பாராட்டப்படும் கிரேக்க தேசத்திலே, ரோமிலே, நேற்று வரை நம்மையாண்ட இங்கிலாந்திலே, சென்ற யுத்தத்திலே ஜகத்தையே திணறவைத்த ஜெர்மனியிலே, சிகப்பான சீனாவிலே, பொதுவுடைமை மணம் கமழும் ரஷ்யாவிலே, புரட்சிப் புயல் வீசிய பிரான்சிலே, அமெரிக்காவிலே, நமது இந்தியப் பூமியிலே அத்தகைய சமுதாய சீரமைப்பிலே சிரத்தை காட்டி, தங்கள் வாழ்க்கையை அதற்கு அர்ப்பணித்த உத்தமர்கள் ஏராளம்.

சமுதாயத்திற்காகச் சலியா துழைத்துவிட்டு, பிறகு சஞ்சலத்தையே பரிசாக பெற்ற உள்ளத்திருத்திய உத்தமர்கள் பலர்.

உலகம் உருண்டையென்று கூறியதற்காக ஊராரிடம் பகைத்துக் கொண்ட கலீலியோ, சமுதாய சாக்கடையைத் தூர்க்க முனைந்த சாக்ரடீஸ், கடவுள்களின் கோணல் கதைகளை எடுத்துக் காட்டிய டயகோரஸ், போப் பாண்டவரின் போக்கிரித்தனங்களைச் சாடிய விக்ளிப், புதியதோர் மதத்தையே நிலை நாட்டி, கடவுள் பெயராலும், குருமார் பெயராலும் நடந்த சூதுச் சுரங்கங்களை இடித்த மார்ட்டின் லூதர், உழைப்பவன் வாழ வழி வகுத்துத் தந்த காரல் மார்க்ஸ் அவர்தம் படை வீரரான லெனின், சரிந்திட்ட சீனாவின் சமுதாயத்தைச் சரியாக்கிய சன்யாட்சன், உலக நோயாளியென்று கேலி பேசப்பட்ட துருக்கியைத் திருத்திய கமால், பாட்டையே, படையாக்கிக் காட்டிய, புஷ்கின், ஷெல்லி, அன்பால் உலகாண்டிட அறிவுரை தந்த புத்தர், பெண்ணுலகத்திற்கு பெரியதொரு உதவி செய்த ராஜாராம் மோகன் ராய், மலையாளத்தார் மனதை விட்டு அகலாத நாராயணகுரு, ஆந்திரத்திலே சமுதாயப் புரட்சித் தீயை மூட்டிய வேமன்னா, ஏழைக்கு வாழ்வளித்த வால்டேர், ரூசோ... இப்படி, உலகத்திலே உத்தமர்கள் பட்டியல் நீளும்.

இவர்களையெல்லாம் நம் நினைவிற்குக் கொண்டு வரும்பொழுது, நம் சிந்தனை, செந்தீயாகிறது!

நமது சமுதாயம் இன்று சாக்கடை! இடிந்திடும் கோட்டை! பாழான மண்டபம்! என்று எண்ணும்பொழுது நம்மை நாமே பார்த்துக்கொள்கிறோம்.

உலக உத்தமர்கள், நம்மைத் தட்டிவிடுகிறார்கள். அவர்கள் தொண்டு நமக்குப் புதியதோர் நம்பிக்கையையும், வலிமையையும் தருகிறது!

திண்டிவனத்தில் மே 20-ஆம் நாள் சமூக சீர்திருத்த மாநாடு நடந்தது.

(8-ம் பக்கம் பார்க்க)

திராவிட நாடு

ஞாயிறு] 27—5—51 [காஞ்சி

# 'தெஹ்ரான்' தேசத்திலே!

அயல்நாடுகளின் ஆசைப் பேச்சு, நமக்கோர் தூசு. அவர்களது அன்பு, நம்மை அதளபாதாளத்தில் வீழ்த்தும். சுரண்டுதலையே குறிக்கோளாகக் கொண்ட சூதர்கள் அவர்கள். அவர்களது ஆதிக்கத்தை எதிர்த்து நாம் தூக்கிவிட்ட கொடியை இனி சாய்க்கப்போவதில்லை. நமது சங்கநாதம், ஒடுங்காது; அடங்காது. நாம் கோழைகளல்ல! அமெரிக்காவின் மத்யஸ்தம், பிரிட்டனின் சமரசத் தூது—இவை, நமக்குத் தேவையில்லை. நம் சோத்துக்குத் தூதுவர இவர்கள் யார்?''

நாற்பது ஆயிரம் மக்கள், அங்கே கூடிக்கிடந்தனர். அவர்கள் அகமும் முகமும் வீரச் சொற்களால் புதுமலர்ச்சி பெற்றன! தங்களது தலைவர்கள் இட்ட முழக்கங்கள், அவர்களது இதயங்களைத் தடவி, இலட்சிய முரசைத் தட்டின! 'நமதே உரிமை' என்ற வீர முழக்கம்—விண்ணுடன் மோதிற்று! அப்போது, எதிர்பாராத விதமாக, ஒருவர், மேடையிலே தோன்றினர் 'வீரர்களே!' என்று, கம்பீரமாக அழைத்தார். கனல் வீசிற்று அவரது பேச்சில். ''நம் சொத்துக்குத் தூது வர அமெரிக்காவும் பிரிட்டனும் யார்? நம்மை எதிர்த்து, இவைகள், வந்தால் நமதுச் சோதர நாடுகளுடன் சேர்வோம்' பக்கத்துணைக்குப் பயமில்லை. இருக்கவே இருக்கிறது, அதோ!'' என்று, ரஷ்யதேசம் இருக்கும் திக்கு குறித்து கையை உயர்த்தினர். கரகோஷம். ஆவேசமுழக்கம்! அந்த, எதிர்பாராதவர், அமர்ந்தார். அவர் யாரெனத் தெரியவில்லை, கூடியிருந்தோருக்கு. அவருடைய 'பெயர்' எவருக்கும் தெரியாது. ஆனால் அவரைப்பார்த்ததும் அதிசயித்தனர்! ஏனெனில், அவர் அணிந்திருந்த, ஆடை கருப்பு! தலைப்பாகையும் கருகிறம்! அவர் முகத்திலே மீண்டு அடர்ந்திருந்த தாடியும் கருப்பு!

* * *

பாரசீகத் தலைநகராம், தெஹ்ரான் நகரிலே கடந்த மே-22ந்தேதி நிகழ்ந்த சம்பவம் இது.

பாரசீகத்திலுள்ள எண்ணெய் கம்பெனிகளைத் தேசிய மயமாக்க வேண்டும் என்ற பாரசீக சட்டசபையின் முடிவை ஆதரித்து நடைபெற்றது, ஒருமாபெரும் கூட்டம்.

அங்கே, இந்த கருப்புடை ஆசாமி தோன்றினர். பேசினர்—வீரம்ததும்ப. ஆச்சரியம் ஏற்பட்டது, எங்கும். ஏனெனில் அவர் ஒரு முல்லா. அரசியல் விஷயங்களைப்பற்றி அறியாதவர், ஆர்வமில்லாதவர், என்று கூறப்படும் 'ரகம்' அவருடையது. அத்தகைய நபரே வந்து, அனல் மொழிகளை வீசுவதென்றால் ஆச்சர்யந்தானே!

முக்கியஸ்தர்கள் மட்டுமல்ல, சாதாரண பிரஜைகூட, பாரசீக சர்க்காரின் புதுத்திட்டம் கண்டு பூரித்துப் போயிருக்கிறான், அங்கே. காரணம், பல்லாண்டுகளாக, ஆங்கிலேய ஆதிபத்யத்தில் இருக்கும் எண்ணெய் குழாய்களை, பாரசீக சர்க்காரே, எதிர்த்துக் கொள்ளப் போகிறது என்பதால்.

உலகத்தின் 'எண்ணெய்க் களஞ்சியம்' என்று அழைக்கப்படும் நாடாகும், பாரசீகம். இந்த எண்ணெய், இல்லாத இடமோ, செல்லாத நாடோ அநேகமாக இல்லையென்றே சொல்லலாம். உலக வல்லரசுகளாம் ரஷ்யா, பிரிட்டன் போன்றவைகளுக்கான பெரும்பாலான எண்ணெய் வசதி, இங்கிருந்துதான் கிடைத்து வருகிறது. பாரசீக சர்க்காரின் வருமானத்தில் எண்ணெய்மூலம் வரும் வருமானம் மிகவும் குறிப்பிடக்கூடியதாகும்.

இத்தகைய பெரும்புகழ் படைத்த எண்ணெய் உற்பத்தி அங்கிருந்தாலும், அதன் முழுப் பலனும் பாரசீக நாட்டிற்குக் கிடைத்ததில்லை.

எண்ணெய்க் குழாய்களை, நிர்வகிக்கும் பொறுப்பை ஆங்கிலோ—ஈரான் எண்ணெய்க் கம்பெனி என்ற பெயருடன் ஆங்கிலேய ஸ்தாபனம் ஒன்றே வகித்து வருகிறது.

இந்தக் கம்பெனியின் மூலதனம் சற்றேறக்குறைய, 21 கோடி பவுன்களாகும். இந்த மூலதனத்தில் பாதிக்குமேல் ஆங்கிலேயருடையதாகும்.

நீடித்த ஒப்பந்தம் செய்து கொண்டு ஏறத் தாழ அரை நூற்றாண்டாக, ஆங்கிலேயர்கள், பாரசீக எண்ணெய்க் குழாய்களை அனுபவித்து வருகின்றனர்.

கடந்த போருக்குப் பிறகு, பாரசீகத்திலும் புத்தெழுச்சி வேகமாக வீச ஆரம்பித்தது. அதன் விளைவாக, 'அன்னியர் ஆதிக்கம் இனி வேண்டேன்!' என்ற முழக்கம், இளைஞர்கள் மத்தியிலே எதிரொலிக்கத் துவங்கிற்று. வளமிகுந்த நாட்டிலிருந்து எண்ணெய் வியாபாரம் செய்து கொள்ளை லாபமடிப்போரின் கொட்டம் தீரவேண்டும். அவர்கள் வசமிருக்கும் எண்ணெய்க் கம்பெனிகள், தமது நாட்டவர் வசம் வரவேண்டும், என்ற ஆவல் கொழுந்து விட்டெரியவே, கடந்த ஓராண்டு முதலாக, பாரசீகத்தில் இடியும் புயலும் எழும்பின! மாணவர்கள் ஆர்ப்பாட்டங்கள், வாலிபர்களின் பொதுக் கூட்டங்கள், வேலை நிறுத்தங்கள், ஆரம்பமாயின!

டூட்டே என்ற பெயரால் அழைக்கப்படும், கம்யூனிச வாடை கலந்த அரசியல் கட்சி, இந்த ஆசையை வளர்த்தது. அதுமுதல் கிழவர் முதல் வாலிபர் வரை 'ஈரான் எண்ணெய் கம்பெனி ஈரானுக்கே' என்று பேசத் துவங்கினர். முற்போக்கு எண்ணம் கொண்ட அரசியல் கட்சிகள் மட்டுமின்றி இஸ்லாமிய ஸ்தாபனம் என்ற பெயர் கொண்ட மத ஆசை கொண்ட இயக்கங்கள்கூட இந்த முழக்கத்தை, எங்கும், எதிரொலிக்கத் துவங்கின!

இந்த நிலையில் கடந்த மார்ச் மாதம் பாரசீக மஜ்லிஸ் (சட்டசபை) முன்பு, ஆங்கிலோ—ஈரான் எண்ணெய்க் கம்பெனி சம்பந்தமாக ஒரு மசோதா கொண்டு வரப்பட்டது.

1949-ல் பாரசீக சர்க்காருடன் மேற்படி கம்பெனிசெய்துகொண்ட ஒப்பந்தத்தைப் புதுப்பித்து அங்கீகரிக்க வேண்டுமென்பதே, அம் மசோதாவாகும். மேற்படி ஒப்பந்தத்தில், 1993 வரை, எண்ணெய்க் குழாய்களை மேற்படி கம்பெனி அனுபவிக்கலாம் என்பதும் விளக்கப்பட்டிருந்தது.





இந்த மசோதாவை அப்போதைய பாரசீகப் பிரதமரான ஜெனரல் அலீரஸ்மாரா, சட்டசபை முன் பிரரேபித்தார்.

முன்னைவிட அதிக ''ராயல்டி'' தருவதாக, எண்ணெய்க் கம்பெனி உறுதி தந்திருப்பதையும், எடுத்துக்காட்டி, இம்மசோதாவை நிறைவேற்றித் தருமாறு மஜ்லிசை வலியுறுத்தினர்.

ஆனால் மஜ்லிஸ் மறுத்தது! எண்ணெய்க் குழாய்கள் தேசீயமயமாக்க வேண்டுமே தவிர மறுபடியும் ஆங்கிலேயக் கம்பெனியிடம் ஒப்புவிப்பதை, ஒரே முகமாக, உறுப்பினர்கள் எதிர்த்தனர்.

பிரதமர், மசோதாவை வாபஸ் பெற்றார். எண்ணெய் பற்றி ஆலோசனை கூறும், கமிட்டிக்கு, அதை அனுப்பிவைத்தார்.

ஆனால், அதே நேரத்தில் ''தேசிய மயமாக்கும் கொள்கை எனக்குப் பிடிக்கவில்லை'' என்றும் அறிவித்தார்—அதையே வலியுறுத்திப் பேசினர்.

மக்களோ தேசிய மயமாக்க வேண்டும் — அதுவே சுகந் தரும் தென்றல் என்று முழக்கமிடுகின்றனர்!

பிரதம மந்திரியோ, ''அது தென்றலல்ல; தீ'' என்று கூறினர்!

இந்த நிலையைக் கண்ட அப்துல்லா ரஸ்டேகர் என்ற இளம் வாலிபன், கொதித்து எழுந்தான். பாரசீகத்தை ஒன்பது மாதங்கள் ஆண்ட, அஞ்சா நெஞ்சன், என்று பெயர் கொண்ட அலிரஸ்மாராவை, பிரதம மந்திரியை, துப்பாக்கியால் சுட்டு வீழ்த்தினன்! பிரதமர்—வாலிபனுல் சாகடிக்கப்பட்டார்!

இத் துயரச் சம்பவம் நடைபெற்ற மறுவாரம், மார்ச் 15ந்தேதி, பாரசீக எண்ணெய்க் குழாய்கள் தேசிய மயமாக்கப்பட வேண்டும் என்ற தீர்மானம், மஜ்லிஸ் முன் நிறைவேற்றப்பட்டது-ஏகமனதாக.

அலிரஸ்மாரா கொலைக்குப் பின் பாரசீகத்தில் படுகொலையும், பரிதாப நிகழ்ச்சிகளும், ஏற்பட்டன. மந்திரிமார்களை நோக்கி, மாணவர்களும் வாலிபர்களும் படையெடுத்தனர்! ஆவேசமும் வெறியும், அட்டகாசத்திற்கு வித்திட்டன!

ஆனால், நல்லவேளையாக அங்கிலை வளரவில்லை — பாரசீக மன்னர் பிறப்பித்த ராணுவச் சட்டம், காதகம் வளராமல் தடுத்துவிட்டது. புது மந்திரி சபை ஏற்பட்டு ஆட்சி நடைபெற்று வருகிறது.

ஆனால், புது மந்திரி சபை நிறைவேற்றிய தேசிய மயமாக்கும் தீர்மானம், பிரிட்டனுக்குப் பேரிடியாகிவிட்டது.

ஏனெனில் பாரசீக எண்ணெய் வியாபாரத்தால் பலன் பெறுவோர், ஆங்கிலேயர்தாம்.

ஆகவே, பாரசீகத்துடன், இங்கிலாந்து இதமாகப்பேசிற்று. 'ஏனிந்த விரோதம்?' என்று கேட்டது. பிறகு எச்சரிக்கை விடுத்தது.

எதற்கும், பாரசீக மக்களும் சர்க்காரும், கலங்கவில்லை.

பிறகு, அமெரிக்காவைத் துணைக்கழைத்து அதட்டிற்று.

ஆத்திரம் : அதிகமாக்கிற்றே தவிர, பணியவில்லை, பாரசீகம்.

அதன் பின் மத்தியஸ்தமாகப் போகலாம் என்று, தூதுவிடுத்தது—பிரிட்டனை ஆளுட் தொழிற்கட்சி.

''உங்கள் இங்கிலாந்தில் பல தொழில்களை தொழிற் சர்க்காருக்காராகிய நீங்கள் தேசியமயமாக்கிக் கொண்டிருக்கும்போது, நாங்கள் மட்டும் செய்தால் ஏன் வீணாகத் தலையிடுகிறீர்கள்?'' என்று பதில் தந்தது, பாரசீகம்.

ஆள்வது தொழிற் சர்க்கார் என்றாலும், ஆங்கிலேய ஆதிக்கம் சீர்குலைவதைக் காண சகிக்கவா செய்வார்கள்! அதிலும் சுரண்டியே வாழ்ந்த கூட்டமாயிற்றே, அது!

ஆகவே, பிரிட்டன், இப்போது பாரசீகத்தை 'மிரட்டும் கட்டம்' உண்டாகியிருக்கிறது. 'கப்பல்படை செல்லலாம்'-என்பதுபோன்ற வெடிவேட்டுகளை, பிரிட்டிஷ் பத்திரிகைகள் கிளம்பிக்கொண்டிருக்கின்றன.

ஆனால், பாரசீகம் சளைத்ததாகத் தெரியவில்லை. அதை, 22ந் தேதிய தெஹ்ரான் கூட்டம் தெரிவிக்கிறது நமக்கு.

அதோடு, தேசியமயமாக்குவதற்கான பூர்வாங்க ஏற்பாடுகளையும், பாரசீக சர்க்கார் செய்யத் துவங்கிவிட்டதாம்.

* * *

பாரசீகம், இங்கிலாந்தின் எதிர்ப்பையும், அமெரிக்காவின் சீற்றத்தையும் தாக்கி பெறிந்துவிட்டு, எங்கள் தேசத்திலே எவருக்கும் சுரண்டும் அனுமதி கிடையாது என்று தீவிரமாக மறுத்துவிட்டது.

எண்ணெய்க் கிணறு பிரச்சினை, எரியும் பிரச்சினையாக மாறுமா, மாருதா என்பதுகூட சிந்தனைக்குரிய சேதியல்ல—எண்ணெய்க் கிணறுகளை தேசியமயமாக்குவோம் என்று எழுப்பிடும் 'தெஹ்ரானின்' தீவிரக் குரல், எதிரொலிக்கும் கருத்தைத்தான் உணரவேண்டும்.

அந்நியர் ஆதிக்கம் எதினும் கூடாது என்ற உணர்ச்சி உலகெங்கும் பரவி வருகிறது.

பாரசீகத்திலேமட்டுமல்ல, இந்த புத்தெழுச்சி, இந்தப் பார் முழுதும் பரவி வருகிறது!

'நமது தாயகம் நம்முடையது, அதன் உரிமை நமக்கே' என்று, முரசொலி முழக்கும் எண்ணங்கள், இன்று எங்கும் பேருரு எடுத்து வருகின்றன.

வல்லரசுகளின் படை பலம், எதிர்ப்போரின் வலிமை, எக்காள மெழுப்புவோரின் சக்தி, இது கொண்டு அடங்குவதல்ல இந்த சுதந்திர தாகம்.

இந்தக் கருத்தை, தெஹ்ரானைத் தலைநகராகக்கொண்ட பாரசீகம் — காண்பிக்கிறது.

இந்தக் காட்சி, சுரண்டி வாழ்வதே இலட்சியம் என எண்ணிக் கிடப்போருக்கு ஒரு எச்சரிக்கைச் சம்பவம்.

சுதந்திர தாகம், எலியையும் புலியாக்கும் என்பதை ஈடுத்துக் காட்டும் நற்காட்சி.

★

5-ம் பக்க தொடர்ச்சி

இந்த மாநாடு, சமூக சீர்திருத்த ஆர்வம் கொண்டோர் அனைவருக்கும் திதிக்கும் திட்டத்தை, நடைமுறையாக்கிக் காட்டியுள்ளது.

நாம், இதுவரை, தி. மு. கழகத்தின் சார்பிலே, அரிய காரியங்களைச் செய்துகாட்டத் தவறவில்லை.

மாவட்ட மாநாடுகளைக் கூட்டி' மக்கள் ஆதரவைத் திரட்டி, வீரம் பேசிடும், ஆளவந்தார்களையே மலைக்க வைத்துள்ளதுமட்டுமல்ல, சமுதாயத்தின் சிக்கல்களை அறுத்தெறியத் தவறியதில்லை.

முத்தமிழை, முக்திக்கும், பக்திக்கும் என்று பாழாக்கிடுவோர் தொகை வர வரக் குறைந்தாலும், அவர்களின், ஆட்டமும் பாட்டமும் ஓயவில்லை. அவர்களுக்கு, முத்தமிழினல் இந்தச் சமூகம் எப்படி, வாழ்வு பெறமுடியும் என்று எடுத்துக்காட்டியிருக்கிறோம், கோவையில்!

பெண்கள் முன்னணியைச் சென்னையிலே கூட்டி, இந்து சட்டத் திருத்த மசோதாவுக்கு ஆதரவு திரட்டி, பெண்ணடிமை தீர்ந்து, நம் மண்ணடிமையை ஒழிக்க மறந்ததில்லை. சென்னை, பெண்கள் மாநாட்டை யாரும் மறந்துவிடமுடியாது.

பெரியகுளத்திலே, வகுப்பு நீதி வேண்டி நிற்கும் எல்லோரையும், கட்சி, கருத்து வேறுபாடின்றி கூட்டி, ஏகக் குரலில் எச்சரிக்கை விடுத்தோம் ஆட்சியாளருக்கு! ஆட்சியாளர்கள் பிறகுதான் டில்லி சென்றனர். திரும்பினர். திருத்தத்தில் இப்பொழுது நிறுத்தியிருக்கின்றனர்.

இப்படி, இந்த ஒன்னரையாண்டுக் காலத்தில் நாம் மகத்தான சாதனைகளைச் செய்துகாட்டியிருக்கிறோம்.

திண்டிவனம், சமூக சீர்திருத்த மாநாடு, நம் இலட்சியப் பாதையில் புதுவேகம் காட்டுகிறது!

இதுவரை நம் நாட்டில், ஆழ்வார்கள் அறிமுகப்படுத்தப்பட்டிருக்கிறார்கள்—நாயன்மார்கள் நாட்டோர் நினைப்பிற்கு இழுக்கப்பட்டிருக்கிறார்கள். ஆனல், சமூகத்தைத் திருத்தப் பாடுபட்ட உலக உத்தமர்களை யாரும், நாட்டோருக்கு எடுத்துக்காட்டியதில்லை.

சம்பந்தநாயனர் தெரியும், சாக்ரடீஸ் தெரியாது! மாணிக்கவாசகர் தெரியும், மார்ட்டின்லூதர் தெரியாது! சிவன், பிரம்பாலடிபட்டது தெரியும், உஜுத்தன் வீசிய குண்டால், அடிமைத்தனத்தை வீழ்த்திய ஆபிரகாம் லிங்கன் மடிந்த சேதி நம் நாட்டோரின் செவி வந்து சேரவில்லை.

பக்திப் பாதை திறக்கப்பட்டுள்ளது—ஆனல், சமூக சீர்திருத்தப் பாதை மூடப்பட்டுக் கிடக்கிறது!

இந்நிலை யொழிக்க, திண்டிவனம் சமூக சீர்திருத்த மாநாடு முதல் முயற்சி — என்றாலும் வெற்றியையும், அதனல் புதியதொரு விழிப்பையும், வேகத்தையும் தந்துள்ள மாநாடு. இதன்மூலம் உலக உத்தமர்களை, நாட்டோரின் சிந்தனைக்கு அழைத்து வருகிறோம்.

இந்தமாநாட்டினை,நடிப்புப்புலவர் கே. ஆர். இராமசாமி, துவக்கி வைத்தார். 'பிரசண்ட விகடன்' ஆசிரியர், தமது எழுத்திலே நேர்மைக்கும், நீதிக்கும் இடம் அளிக்க மறக்காத தோழர் நாரண—துரைக்கண்ணன் தலைமை தாங்கினர்.

இந்த மாநாட்டில் உலக உத்தமர்களின் வாழ்க்கை வரலாறுகளை எடுத்துக் கூறினர் நம் இயக்க முன்னணி வீரர்கள்.

இந்த மாநாட்டை வெற்றிகரமாக நடத்த, அரும்பாடு பட்டார்கள், திண்டிவனத்திலுள்ள இயக்க இளைஞர்கள் எல்லோரும்! அமைதியே உருவான தோழர் ஆ. தங்கவேலு அவர் பக்கம் நின்று இரவு, பகல் என்று பாராமல் பணியாற்றிய தோழர்கள் என். எம். கோபால், எஸ். பூபாலன், எஸ். நடராசன், கே. துளசிங்கம், எம். முத்துசாமி, என். பி. ராசு, ஆகியோரையும், இன்னும் உள்ள இயக்கத்தின் ஈட்டி முனைகளான வாலிபர் பட்டாளத்தையும் நாம் வாழ்த்துகிறோம்—பாராட்டுகிறோம்!

சீர்குலைந்த திராவிடசமுதாயத்தின் நிலை—உடைந்த தங்கக்குடம்போல அதனைப் பகுத்தறிவுத் தணலிலே, சுயமரியாதைத் தங்கப்பாளத்தால் உருவாக்க முடியும் என்ற நம்பிக்கை தந்து விட்டது இந்த மாநாடு!

✕

## தேவை! தேவை!!

விஞ்ஞானம் செய்யாத வேலையை ஒரு விநோதப் பிறவி செய்கிறார்!

சாதாரண மனிதர், கூறுவதல்ல—ஒரு கனம் கூறிடும் மணி மொழி!

இந்தமாதிரி, விஞ்ஞானத்தையே குறைத்துப் பேசும், மகான் வேறு யாராக இருக்க முடியும்?

நாட்டிலே, மழையில்லை யென்ற நிலை யொழிக்க, மரம் நடுங்கள் என்ற 'மகரிஷி' மந்திரி முன்ஷி யாரேதான்!

தண்ணீர்த் தேக்கமிருக்கும் இடங்களைத் தேடி அலுக்கின்றனர் விஞ்ஞானிகள். ஆனல், இந்தியா விற்குக் கிடைத்துள்ள பானிவாலா மகராஜ் தாட்டமிடங்க ளெல்லாம், கங்கை பொங்குமிடமாகக் காட்சியளிக்கிறது என்கிறார் முன்ஷி.

அவரது தெய்வீக சக்தி, விஞ்ஞான கட்டு திட்டங்களில் அடங்காததாம்—ஆனலும் கொஞ்சமும் தவறவில்லையாம், அவரது, நீர்த் தேக்க கண்டு பிடிப்புகள்.

பகீரதனின் மூதாதையரின் சாம்பல்மீது கங்கைநீர் ஓடச் செய்ய ஒற்றைக்காலில் தவமிருந்து, கடைசியாக, பரமசிவன் காட்சி தந்து, தலைமயிரின் ஒன்றினை உருவி, கங்கையை அனுப்பினராம்! பகீரதன் போல, எல்லோரும் கைலாயம் நோக்கித் தவமிருங்கள் என்று சொல்லவில்லை.

விஞ்ஞானம், இவர்கள் கையில் சிக்கி, வேதனைப்படுகிறது.

நீர்த்தேக்கம் காண மகான், ஆனல் பசியா வரந்தர ஒரு மகான் கிடைக்க வில்லையே, இவர்களுக்கு!

இராம இலக்குமணரை அழைத்துச் சென்ற, விசுவாமித்திரர், அவர்களுக்கு இந்த பசியா மந்திரத்தை ஓதினராமே—அந்தப்பயிற்சியைப் பெற்ற மகான் கிடைக்கமலா போய்விடுவார்.

இப்பொழுது 'இந்து'விலே ஒரு விளம்பரம் தரலாம் தேவை, தேவை உடனே தேவை! பசியா வரம் தரும் பரமாத்மாதேவை! சம்பளம் உண்டு. இந்த நாட்டுச் சாப்பாட்டுச் செலவு முழுவதும் வசூலித்துத் தரப்படும். உடனே விண்ணப்பிக்கவும். விண்ணப்பம் அனுப்பவேண்டிய முகவரி: மகான் தேடி, மந்திரி முன்ஷி, பட்டினி மஹால், டில்லி என்று போட்டால், போதுமே!

✻





தொடர் கதை **யாத்திரை** தில்லை-வில்லாளன்

1

பத்மாவுக்கு

## சுந்தரம்

[ஒடியகதை :— சுந்தரம், தன் காதலி பத்மாவுக்கு தன்உள்ளத்தில் புதைந்துகிடந்த எண்ணங்களை எடுத்துச் சொல்லி வருகிறான். பத்மா, அன்றொருநாள், அவன் எழுதிய 'அவள்' நாடகத்திற்கு வந்திருந்தாள். அந்நாடகத்தைப்பற்றி விளக்குகிறான். அவன் காதலைத் துடித்த துடிப்புகளைப் படம் பிடிக்கிறான்............]

"பத்மா,வேடிக்கைக்காகச்சொல்கிறேன். ஆனல் அதனல் நல்ல விளக்கம் கிடைக்கும். நான் ஒரு பெண்ணை விரும்புகிறேன். அவள் பேரழகி என்பது என் திடமுடிவு. ஆனல் அவளுக்கு என் மனநிலை தெரியவில்லை — தெரிவிக்கப்படவுமில்லை........."

"போதுமே உங்கள் கற்பனை — ஒரு பெண்ணை வானத்து விண்மீனுக்கு ஒப்பிடுகிறீர்கள். அவ்வளவுதானே! ஆனல் இந்தப் பெண்கள் எளிதில் பிறர் கழுத்தில் ஒளிவிடும் நட்சத்திர மாலையாகிவிடுகிறார்கள். ஆகவே உங்கள் கவலையை விட்டொழியுங்கள்!" என்று சட்டென்று ஒரு முற்றுப்புள்ளியிட்டாய் என் பேச்சிற்கு! ஆனல் நான் விடவில்லை — தொடர்ந்தேன்.

"பெண்கள் நட்சத்திரங்கள்தான்—சமூகவானத்தில் அவர்கள் ஒளிவிடுகிறார்கள்! ஆண்மை என்ற சூரியனின் அட்டகாசம் மடிகிறவரை பெண்மை மறைந்தே வாழ்கிறது. தண்ணிலவு என்ற சமத்துவம் தோன்றியவுடன் பெண்கள் ஒளிவிடுகிறார்கள் — ஆனலும் வெகு தொலைவிலேயே நிற்கிறார்கள். அருகில் வந்துவிட்டால்...... ஆண்மைக் கதிரவன் என்ன ஆவது?" என்று பித்தனைப்போல குழப்பினேன்.

"என்னிடம் ஏதாவது சொல்ல விரும்புகிறீர்களா? நேரடியாகச் சொல்லுங்கள் தந்திர வழியென்று தவறுதலான பாதைக்குப் போய்விடாதீர்கள். பெண்மையைப் புகழ்வதால் நான் ஏமாந்துவிடமாட்டேன்" என்று சிரித்துக் கொண்டே!

நான் எதைச் சொல்வது பத்மா. பேசாமல் வாய் மூடியபடியே ஆகாயத்தைப் பார்த்தேன். நிலவு தனது கிரணங்களால் உன் முகத்தை மேலும் அழகு செய்ய முயற்சி செய்துகொண்டிருப்பதைக் கண்டேன். அப்பொழுதுதான் வீடு திரும்பவேண்டும் என்ற எண்ணமும் வந்தது. பிரிந்தோம். ஆனல் நீ மட்டும் என்னிடமிருந்து எதையோ பிடுங்கப்போவதாக ஒரு பிரமை. — ஆம், என் இதயம் உன்னோடு வந்துவிட்டதே!

பிறகு கல்லூரியில் பட்டமளிப்பு விழா மண்டபம்—ஏராளமான கூட்டம். தொண்டர்கள் படையிலே நீயும் ஒருத்தியாக இருப்பதைக் கண்டேன். உன்னோடுஎதையாவது பேசி வம்படிக்கவேண்டும் என்று என்மனம் பிடிவாதம் செய்தது. ஆகவே நீ நின்றிருந்த வாய்ப்படி வழியே நுழைந்தேன். உன் குளிர் விழிவழியவிட்டபார்வையருவியிலே மூழ்கினேன். என்உள்ளத்தில் ஒரு புதுவேகம் — உடலுக்கு ஏதோ திடீர் வலிவு வந்துவிட்டதாக ஒரு நம்பிக்கை! என்நடையிலேகூட ஒரு புது எடுப்பும், மிடுக்கும் இருந்தன என்பதை என்னைக் கூர்ந்து கவனித்தவர்கள் அறிந்திருப்பார்கள். பெண்களைக்கண்டவுடன் கிராப்பை ஒழுங்கு செய்துகொண்டு, மடிந்து கிடக்கும் கழுத்துப் பட்டியைத் தூக்கிவிட்டு நல்ல நடை போடும் 'வாலிப அருணகிரிகள்'போல நான் நடந்தேன், அன்று!

"பத்மா, இன்று என்ன விழா?" என்றேன் அன்றுதான் வானுலக வீதியை விட்டு வந்த புதியவனைப் போல!

"இந்திர லோகத்தைவிட்டு இப்பொழுதுதான் வருகிறீர்களா!...... பூலோகமே மறந்துவிட்டதோ! இன்று பட்டமளிப்பு விழா........ போய் உட்காருங்கள்" என்று கொக்கொலி சிரிப்போடு.

"ஆமாம், பத்மா... இந்த ரம்பை, ஊர்வசி, திலோத்தமை......அது தான் உங்கள் வகையறா......விடுகிறார்களா? தொல்லை கொடுத்துவிட்டார்கள்!"

"சுந்தர்......போதுமே உங்கள் பிரதாபம்......"

"சரி, சரி, இன்றைக்கு என்ன பட்டம் தரப்போகிறார்கள்"

"அதுவா...உங்களுக்குப் டோக்கிரி என்று பட்டம் தரப் போகிறார்கள்!"

"சே...நான் வாங்கப் போகிற பட்டம் வேறு—சொல்லட்டுமா?"

"என்ன அது?"

"காதலன்...!"

"ஓகோ......வாங்க வேண்டிய இடம் இதுவல்ல, பூந்தோட்டம், கொடுக்கவேண்டியவர் கவர்னருமல்ல, அது......, போய் வாரும் காதல......"

'களுக்'கென்று சிரித்தாய். அதற்குள் மேலும் மாணவர்கள் வர ஆரம்பித்துவிட்டார்கள். உள்ளே நுழைந்தவன் விழாவிலே நடந்த நடவடிக்கைகளையா கவனித்தேன்! இல்லை. என் அழகு ராணியையே கவனித்தேன்!

பிறகு ஒரு நாள்...கல்லூரி மாணவர்கள் நடத்திய பொருட் காட்சியிலே உன்னைச் சந்தித்தேன். காற்றைப் பிரித்திடும் முறையை விளக்கிக் கொண்டிருந்தாய். கரியமில வாயு, பிராணவாயு இரண்டும் கலந்திருக்கிறது என்பதை மிகத்

தெளிவாகச் சொல்லிக் கொண்டிருந்தாய். நான் வந்து சேர்ந்தேன் அந்த இடத்திற்கு! உன் முகம் மாறிய போக்கை என்னால் வருணிக்க முடியவில்லையே!

"சுந்தர்.........இங்கேயும் வந்து விட்டீர்களா? சரி போங்கள்!"

"நான் என்ன அவ்வளவு பாவியா......எல்லோருக்கும் வரம் அளிக்கிற தெய்வம் — என்னை மட்டும் விரட்டியடிக்கிறது!"

"தெய்வத்திடம் எதிர்த்துரையாடும் பக்தன்..."

சீற்றம் வேண்டாம் தேவி......பக்தன் இதோ பணிகிறேன்...உடனே போய்விடுகிறேன். ஆனாலும் ஒரு சந்தேகம்...காற்றில் கரியமிலவாயுவும், பிராணவாயுவும் கலந்திருக்கிறது. ஆனால் வாழ்க்கையில்...?"

"பெண்மையின் சகிப்புத்தன்மையும், ஆண்களின் அடங்காப்பிடாரித்தனமும்!"

"இல்லை, ஆண்மையின் உழைப்பும் ஊதியமும், பெண்மையின் சோம்பலும், சோற்றுக்கடையும்!"

"சுந்தர்......"

"பத்மா......"

"சரி, 'பார்க்கிலே' பார்ப்போம், போங்கள்"

அப்பொழுதும் நான் விலகிக் கொண்டேன். இப்படி ஆயிரம் சந்தர்ப்பங்கள்—அருமையான வாய்ப்புகள் இருந்தன. இந்த நேரங்களிலெல்லாம் அந்த எண்ணம் அரித்தபடியேதான் இருந்தது. இருந்தும் கேட்கமுடியவில்லை. சில சிறுவர்கள் புகை பிடிக்க மொக்குப் பருவத்திலேயே கற்றுக்கொள்கிறார்கள். தப்பித் தவறி பெரியவர்கள் கண்களில் புகை பிடிக்கும்பொழுது மாட்டிக்கொண்டால் எப்படித் தவிக்கிறார்கள்? புகையை விழுங்குகிறார்கள், நெருப்புடன் கூடிய புகையிலைச் சுருளை உள்ளங்கையில் மறைக்க முனைகிறார்கள்...அப்படிச் சில சந்தர்ப்பங்களில் உன்னிடம் தவித்திருக்கிறேன் பத்மா. சில வேளைகளில் கேட்டுவிடுவது என்று துணிந்து கேட்கவும் நாவை உயர்த்திவிடுவேன். பிறகு ஏதோ ஒரு சக்தி தடுத்துவிடும். சில சந்தர்ப்பங்களில் அதைப்பற்றி ஆரம்பித்து பிறகு புகையை விழுங்கித் தவிக்கும் சிறுவனைப்போல வேறு திசைக்குப் பேச்சை இழுத்துச் செல்ல பெரும்பாடுபட்டிருக்கிறேன். பத்மா, நீ என்னை என்ன எண்ணிக்கொண்டாலும் சரி என்றுதான் கடைசியாக என் எண்ணங்களையெல்லாம் தொகுத்து அந்த முடங்கலாக உனக்கு அனுப்பினேன்.

உன் விடையைக் கண்டேன். திடுக்கிட்டேன். அழுதுவிட்டேன்! ஒரு கோப்பை பால் வரும் என்று எண்ணியிருந்தேன். நீ ஒரு கோப்பை நஞ்சை அனுப்பிவிட்டாய். இது நீதியா, பத்மா! நினைத்துப் பார். நான் உன்னை நேசிக்கிறேன், மனதார! பத்மா இல்லாத எதிர்காலம் கதிரவன் இல்லாத பகல், நிலவு இல்லாத இரவு எனக்கு...... என்று எண்ணிக்கிடக்கின்ற இந்த வாலிபனுக்கு நீ என்ன விடையிறுப்பது? ஒரு கிளி தன் இருப்பிடத்திலிருந்து கொஞ்ச தூரத்தில் ஒரு காய் இருப்பதைக் கண்டு ஆனந்தக் கூத்தாடிற்று. அது என்றைக்காவது ஒருநாள் பழுத்துவிடும் என்ற அசைக்கமுடியாத நம்பிக்கையிலே ஒவ்வொரு நாளும் அந்தக் காயைப் பார்த்தபடியே இருந்தது. காய்மட்டும் கனியாகவே இல்லை. திடீரென்று ஒருநாள் வெடித்துவிட்டது. ஆம், அது இலவங்காய், வெடித்துப் பஞ்சாகிவிட்டது! கிளியின் இதயமும் வெடித்துவிட்டது ......இலவங் கனிக்குக் காத்திருந்த கிளியானேன் நான்.

அன்புள்ள சுந்தர்......என ஆரம்பித்து எழுதி முடித்திருக்கிற கடிதத்தை இதுவரை நூற்றிருப்பத்தெட்டு தடவைகள் படித்திருப்பேன். திருக்குறள் முன்னுரையில் சின்னஞ்சிறு வயதில் நான் படித்த நினைவிருக்கிறது. பயிறுறும் பயிறுறும் புதுமை பயப்பதாய், நவிறுறும் நவிறுறும் இன்பம் தருவதாய்......உள்ளது குறள் என்று எழுதியிருப்பதாய் ஒரு நினைவு. உன் கடிதமும் ஒரு குறள்தான். நான் எழுதிய நீண்ட கடிதத்திற்கு நீ எழுதியிருந்த விடை அளவில் குறைவுதான் — இரத்தினச் சுருக்கந்தான்! கடுகைத் துளைத்து எழுகடலைப் புகுத்தி சிறுகத் தரித்த குறள் என்பார்கள். நீயும் அதே முயற்சியிலே ஈடுபட்டிருக்கிறாய்.

"தங்கள் எண்ணம் எனக்கு நன்றாகத் தெரிகிறது. உங்கள் கடிதம் எனக்குச் சொல்லியறிந்துகொண்ட செய்தியல்ல இது; நீண்ட நாட்களுக்குமுன்னரே தெரிந்துகொண்டேன்! என் இதயத்திலும் தங்களுக்கு இடம் இல்லை என்று அறவே வெறுத்துப் பேசவும் முடியவில்லை — எப்படி முடியும்? பத்மாவின் இதய மன்னனாக சுந்தருக்கு உள்ள உரிமையைவிட வேறு யாருக்கு அதிக உரிமை வந்துவிட்டது! இருந்தும், நான் ஒன்றுமறியாதவளாக ஏன் நடந்துவந்தேன், தெரியாது உங்களுக்கு, தெரிந்திருந்தால் இப்படித் துடித்திருக்கமாட்டீர்கள்!

காதல் என்று நீங்கள் சொல்கிறீர்கள். உண்மை. ஒத்துக்கொள்கிறேன். காதல்போல் விடையிறுக்கவேண்டுமானால் ஆகட்டும், கண்ணாளா......என்றுதான் பதில் கூறவேண்டும். ஆனால்........? வேறொன்று குறுக்கில் நிற்கிறது. கடமை என்னைத் தடுக்கிறது. தங்களுக்கு ஒப்புதல் விடை தரக்கூடாது என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டது. சுந்தர்...என்னை மன்னித்துவிடுங்கள். மறந்துவிடுங்கள். இனி தொடர்ந்து தங்கள் கடிதப் படைகளையோ, சந்திப்புப் பட்டாளங்களையோ அனுப்பி என்னைத் தொல்லைக்குள்ளாக்காதீர்கள்......"

இப்படி எழுதிவிட்டாய். இந்த விடையை நான் எதிர்பார்க்கவில்லை. நம் வாழ்க்கை தீபத்தின் ஒளியை அவித்துவிட்டாய் உன் விடையின் மூலம்! இதோ என் எதிர்காலம் இருண்டுவிட்டது! வருங்கால வாழ்க்கையில் இனி வளம் இருக்க வழியில்லை. பத்மா ஒரு பருவ மழை —மழையற்ற பயிர் நிலம் என் வாழ்வு இனி!

(தொடரும்)





2-ம் பக்கத் தொடர்ச்சி

படி அவள் செய்தது குற்றம். வேண்டுமானால் தண்டனையைக் குறைக்கலாம், அபராதம் அதிகம் போடாமலிருக்கலாம், ஆனால் அரிசியைத்தந்துவிடமுடியாதே! நன்று தெரிகிறது அவளது நிலை. நான் என்ன செய்யமுடியும்! சட்டம் இடந்தராதே — சட்டப்படி அவள் செய்தது குற்றமாயிற்றே — இன்னொரு இடத்திலிருந்து அவள் அரிசி வாங்குதல் ஆகாதே. அவள் காசு தந்து வாங்கியதாகச் சொல்கிறாள். ஆனால், அது கள்ளத்தனமாக அவள் அரிசியைக் கடத்தினாள் என்றுதானே கூறப்படும்! கூண்டிலே அவள் கண்ணீரும் கம்பலையுமாய் நின்ற காட்சி, கருணை காட்டுங்கள், புண்யவானே' என்று கதறியகோரம். விழியிலே புரண்ட கண்ணீரை வழித்தெறிந்தபடியே 'ஜெயிலுக்கு வேணுமானாலும் அனுப்புங்க: அரிசியைமட்டும் தந்துடுங்க' என்று அவள் வேண்டிக் கொண்ட பரிதாபம் இப்போது நினைத்தாலும் என் நெஞ்சம் பதைக்கிறது. ஆனால் நான் என்ன செய்ய முடியும்? இதயம் 'கருணை காட்டுக' என்று சொல்லலாம். ஆனால்சட்டம்? சட்டப்படி நான் அவளுக்கு அபராதம் விதிக்கத்தான் வேண்டும்.

அபராதத்தைக்கட்ட இந்த நிரபாதி எங்கே செல்வாள்? ஐயோ—மூளை குழம்புகிறதே. அபராதம் கட்ட இந்த அன்றாடம் காய்ச்சியால் இயலாதே. ஆனால், அதற்காக நான் என்ன செய்யமுடியும்? சட்டமும் சர்க்காருமல்லவாஎன்கண்முன் காட்சி தருகின்றன. வேதனையான வேலை! அதிலும் இப்போது என்னிடம் வரும் வழக்குகள், எவ்வளவு விசித்திரமானவை! அவள் சட்டப்படி குற்றவாளி. ஆனால்மனிதநிலைப்படி, பரிதாபத்துக்குரியவள். எதை நான் அனுசரிப்பது சட்டத்தையா, சமூக நிலையையா? நீதிபதியின் கடமை, சட்டத்தை நடத்துவது தானும்! சட்டப்படியே, அவளைத் தண்டிக்கத்தான் வேண்டும். வேறு வழியில்லை!

## போலீஸ்

"அப்பா! என்ன அட்டகாசம் செய்துவிட்டாள். கண்ணீரைக் காட்டியல்லவோ கதறினாள். நல்ல வேளை. நீதிபதி, அவள் வார்த்தையை எடுத்துக்கொள்ளவில்லை. அவள் சொன்னதை உண்மை யென்று நம்பினால் என்னவாயிருக்கும்! நம்கதி அதோகதிதான். வேலை தீர்ந்திருக்கும். 'டிஸ்மிஸ்!' — திண்டாட்டம்!! நானும் எத்தனையோ பேரை பார்த்திருக்கிறேன். அவளைப்போல் துணிவு கொண்டவளைக் கண்டதே இல்லை. 'அரிசியை வைத்துவிட்டு ஓடுடிகழுதை'என்று எல்லோரையும் அதட்டுவதைப் போலத்தான் அதட்டினேன். அவள் அசையவில்லையே! 'முடியாது' என்றல்லவா கூறிவிட்டாள். நல்லமூட்டை—நாலேந்துபடியாவது அரிசி இருக்கும். போய்விட்டதே! வீட்டிற்குப்போனால், அவள், உலை வைக்காட்டுவாள். குழந்தைகளோ, அப்பா சோறு' என்று உயிரை வாங்கித் தொலைக்கின்றன. நல்ல உத்தியோகம்! சே, எவ்வளவுதொல்லைகள்!! மாதம் முப்பது, நாற்பது வருது, சம்பளம்னு. ஒரு வாரம் அரிசி வாங்கவே, அது, ஆகிவர்ரது இல்லே. தினம் வீட்டிலே அழுகையும் ஒப்பாரியும்தான்! அதை ஈடு கட்ட, இதுமாதிரி ஏதாவது 'சான்ஸ்' கிடைக்கும். யாராவது திருட்டுத்தனமா, அரிசி கொண்டு போக முயற்சிப்பார்கள். நான்போய் மிரட்டுவேன். "தப்பிச்சா, போதும்னு' போட்டுட்டு ஓடுவான்க, சிலபயலுக. சிலபேர் அகப்பட்டு விட்டாலும், 'என்னே பிடிச் சுட்டுப் போகாதீங்க. சாமி! பிள்ளைக் குட்டிக்காரன்.காப்பாத்தணும்னு காலிலே விழுவான்க. நானும் கருணை காட்டுவதுபோல, 'கொண்டு வந்ததை வைச்சுட்டு, ஓடுடா'ன்னு விரட்டுவேன். வேறு என்ன செய்வது? நான் செய்வது தவறுதான். அது தெரியாமல் இருக்க நான், என்ன, மரமா? கல்லா?—மனுஷன் தானே. அதனால்தான், கோர்ட்டிலே அவள் கதறியபோது, என்னால் சகிக்க முடியவில்லை. கண்றாவியாக இருந்தது. அவள் குடும்பக் கதையைப் பற்றிக் கூறியபோது என் நினைவெல்லாம் என் மனைவி, குழந்தைகள் மீதுதான் ஓடிற்று. அவள் பேசினாள்! நான் பேசவில்லை! அதுதான் வித்தியாசமே தவிர, அவள் குடும்பத்தைப் போலத்தான் என்னுடையதும். என் செய்வது! மிரட்டத் தெரியும், அதட்டத் தெரியும் எனக்கு. ஆனால் பசித்தால் அழும் குழந்தையையும் மனைவியையும் காணும்போது! நானும் மனிதன் தானே. அதனால்தான் வேறு வழியில் அரிசி தேடவேண்டிய அவசியத்துக்கு ஆளானேன். எனது உடை, இந்த வேலையில், நல்ல பயனைத் தந்தது. ஆனால், அவளிடம் பலிக்கவில்லை! கோபம் வந்தது எனக்கு. ஆகவே, அவளை இழுத்துப் போனேன். கோர்ட்டுக் கூண்டிலே நிறுத்தினேன். ஆனால், அவள் பயமோ, பதட்டமோ இன்றிப் பேசினாள். பேசும்போது, உண்மை அத்தனையும், கூறிக்கொண்டே வந்தாள். 'அப்போது, என்னைப் பற்றியும் சொன்னாள். நான் பயந்து போனேன்—எங்கே, நீதிபதியின் பார்வை நம்மீது திரும்புகிறதோ என்று. நல்ல வேளை! நீதிபதி அவளுக்கு அபராதம் போட்டுவிட்டார். நம் தலை தப்பிற்று. ஆனால், வீட்டுக்குப் போகவேண்டுமே, ஐயோ! உலகமே, அங்கு சென்றதும் 'அரிசி இல்லை' என்ற அழுகையல்லவோ காத்திருக்கும்!

## சென்னை மந்திரியார்

"பத்திரிகையில் பார்த்தேன், அந்தச் செய்தியை. ஒரு பெண், 'ஜெயிலுக்கு வேணுமானாலும் கொண்டு செல்லுங்கள். அரிசியை மட்டும் எடுத்துக் கொள்ளாதீர்கள்'' என்று கோர்ட்டிலே அழுதாளாம். பரிதாபமான செய்தி! பார்த்ததும் பதறத்தான் செய்தது. பாலும் தேனும் வழிந்தோடும் என்று பிரசங்கம் செய்துதான் பெற்றேன் இந்த பதவியும் வாழ்வும்! ஆனால், என்ன நடக்கிறது நாட்டில். வேதனை! வேதனை!! நினைத்தாலே, கலங்காமலில்லை உள்ளம். யாராவது எதிர்க்கட்சிக்காரர் கேட்டால், அவர்கள் வாயை அடக்கிவிடுகிறேன்—உரத்த குரலும் ஊராளும் அதிகாரமும் இருப்பதால். ஆனால் உண்மை என் கண்களுக்குத் தென்படாமலா இருக்கிறது? நான் மந்திரிதான்—ஆனாலும் மனிதன்தானே!எல்லோரைப்போல கண்களும், மனமும் எனக்கும் இல்லாமலா போயிற்று? பட்டினியால் சாவதும், பலர் மனம் நொந்து சபிப்பதும், எனக்குத் தெரியாமலில்லை! என் செய்வது? அதிகாரம் வந்தது—மந்திரியானேன். ஆனால் நினைத்ததை யெல்லாம் செய்யவா முடிகிறது? எதற்கெடுத்தாலும் மத்ய சர்க்காரை நோக்கி ஓடவேண்டியிருக்கிறது! அப்படித்தான் அடிக்கடி ஓடி வருகிறோமே! அந்த டில்லி,

எங்களை எப்படி நடத்துகிறது தெரியுமோ. சொன்னால் வெட்கக்கேடு!

சென்னை மாகாணத்துக்கு பத்து லட்சம் டன் உணவுப் பொருள் தேவையெனக் கேட்டோம். ஐந்து லட்சம்தான் தரமுடியும் என்றார்கள். 'ஐய்யய்யோ! அது எந்த மூலைக்கு' என்று தூது விடுத்தோம். சரி, ஆறு லட்சம் தருகிறோம், என்றார்கள். கொஞ்சம் தெம்பு வந்தது. ஆனால், இப்போது சொல்லுகிறது.

டில்லி: 'ஆறு என்று சொல்லியது உண்மையல்ல. ஐந்துதான் தரமுடியும்' என்று. இந்த ஏமாற்றத்தை, யாரிடம் போய் சொல்வோம்!

அது மட்டுமா இன்னொரு வேதனையைப் பாருங்கள்! இங்கு வாழும் மக்களுக்கு 8 அவுன்சு கூட தர முடியாது தத்தளித்துக் கொண்டிருக்கிறோம். மக்களோ 'எட்டு போதவில்லை' என்று வேதனைப்படுகிறார்கள். நாங்களும் விரைவில் எட்டைப் பத்தாக்குகிறோம் என்று ஆசை காட்டி வருகிறோம். இங்கே, எட்டு அவுன்சுக்கே, தான்யமில்லாமல் சஞ்சலப்பட்டுக் கொண்டிருக்கிறோம், டில்லி, தயவு காட்டாததால்! ஆனால் அதே நேரத்தில் பீகார் மாகாணத்தில் 12 அவுன்சு ஆகியிருக்கிறது, உணவு ரேஷன். பீகாருக்கு மட்டும் சலுகை காட்டியிருக்கிறது, மத்ய சர்க்கார். சென்னை, 8 அவுன்சு தரவும் வழியில்லாமல் திண்டாடுகிறது! பீகாரிலோ 8, 12 ஆக்கப்பட்டிருக்கிறது!

இதைப் பார்த்தால், இங்குள்ளோர், எங்களைத்தான் பரிகாசம் செய்வர். நாங்கள் கேட்டால் மத்ய சர்க்கார் அதட்டுகிறது! ஆனால் வடநாட்டு பீகாருக்கோ வசதி செய்து தருகிறது!

இங்கே 'ஜெயில்கூட பரவாயில்லை' என்று ஏழைப் பெண் கதறுகிறாள். ஐயோ, எங்களால் தாங்கவே முடியவில்லை—டில்லி காட்டும் ஆதிக்கத்தால். 'எனது மக்கள் வாழ்கிறார்கள். நாங்கள் மட்டும் வாடுவதா?' என்று மனச்சாட்சி கேட்காமலில்லை. ஆனாலும் என் செய்வோம்!

★

# டில்லி தாக்கப்பட்டது!

—※—

டில்லியை படைகள் தாக்க ஆரம்பித்துவிட்டன!

யுத்தப் பிரகடனம் செய்தாகிவிட்டது! இனிப் போர் நிறுத்தப்படுவதென்பது முடியாததாகி விட்டது!

படைகள், தலைநகர் டில்லியைச் சுற்றி வளைத்துக் கொண்டன.

'எங்கு பார்த்தாலும், அதே படை வீரர்கள்'

டில்லி, இனி நாசத்தின் இருப்பிடந்தான்—பஞ்சத்திற்குப் பலியாகப் போகிறது!

படை கிளம்பிவிட்டது. எதிர்க்கவோ முடியாத படை என்ன செய்வார்கள்?

சுற்றுப்புற கிராமங்கள் சர்வ நாசமாக்கப்பட்டுவிட்டன.

இந்த மாதத்திற்குள்ளாகவே, இந்தியா முழுவதுமே, இந்தப் படை புகுந்து விரியுமோ என்று அஞ்ச வேண்டியுள்ளது.

தாக்கீதுகள் பறக்கின்றன, பல ராஜ்யங்களுக்கு! தடுப்பு வேலைகள் துவக்குங்கள், எதிர்ப்பு முன்னணி ஆரம்பியுங்கள், படையை வலுவாக்கி, பாதுகாப்பு தேடுங்கள் என்றெல்லாம் உத்திரவுகள் டில்லியிலிருந்து நிமிடத்திற்கு நிமிடம் போய்க்கொண்டே இருக்கின்றன.

டில்லியின் மீது படையெடுப்பா? எங்கிருந்து படையெடுப்பு என்று கேட்கத் தோன்றும்! முன்னறிவிப்பே இன்றி இந்த தாக்குதல் ஆரம்பமாகிவிட்டது.

பக்கத்து நாடுகள் படையெடுத்தனவோ என்பீர்கள். இல்லை.

பாகிஸ்தானின் பயங்கர முஸ்லிம் லீகோ என்றால் இல்லை.

ரஷ்யா செய்த ரகசியக் கோளாறோ? இல்லை, இல்லை.

கொரியப் போர் இப்படித் திரும்பிவிட்டதோ? அதெல்லாம் ஒன்றுமில்லை.

பின், யார் படை யெடுத்துவிட்டார்கள்?

படையெடுத்தது, அந்நிய நாட்டுப் படையல்ல—வெட்டுக் கிளிகள்!

இந்த வெட்டுக்கிளிப் படையெடுப்பால் தான், டெல்லி பயந்துவிட்டது!

டெல்லியிலே, அரியாசனம் ஏறியுள்ள காங்கிரசாட்சியினருக்கோ, கணத்திற்குக் கணம் பயந்தான்!

வெட்டுக்கிளிப் படையெடுப்பைக் கண்டல்ல — விதவிதமான படையெடுப்புகள் காங்கிரசாட்சியின் மீது!

'லோகஸ்ட்' என்று கூறப்படும் பெரிய வகை வெட்டுக் கிளிகள் கூட்டம் கூட்டமாக வரும், பாய்ந்து பாய்ந்து போகும். வயல்கள் நாசமாகும். பயிர்கள் பாழாகும்.

(5-ம் பக்கம் பார்க்க)

4-ம் பக்கத் தொடர்ச்சி

காக அவர்கள் ஏற்று நடத்துவதானாலும், மனமில்லை, அவர்களுக்கு—பணமில்லை யென்ற பல்லவி, பாடாத நேரமில்லை!

இதிலேயே, இந்திய சட்டத்தின் 19(16)வது ஷரத்து வேறு இதற்கு எதிர்ப்பாம், அதற்குத் திருத்தம் வேண்டினால், துடிக்கிறார்கள், நஷ்ட ஈடு தேவை என்கிறார்கள்.

இப்படியிருந்தும், காட்கில் பேசுகிறார்.

கோவலன், மாதவி வீட்டில் மாலை நேரத்தில் பேசிடும் பேச்சு மந்திரி காட்கிலாரின் குரலிலே ஒலிப்பதிவாகி விட்டதைப் பார்க்கிறோம்.

மாதவி வீட்டு, மாலை நேரப் பேச்சு, ஊடல் தீர வழி செய்திருக்கலாம். ஆனால் கண்ணகியின் கண்ணீரைத் துடைத்திருக்க முடியாது. அதுபோலத்தான் தொழிலாளியின் துயர் துடைக்க முடியாது, காட்கிலாரின் பேச்சு! ஆம், இதை அவ... அறியவேண்டும்.

—

Edited Printed & Published by C. N. Annadurai M. A at DravidaNadu" Press
95, Tirukkachinambi Street Kancheepuram.

